## நூல்செய்தற்குக்காரணம்.

கலிநிலைத்துறை.

பொருவில்கச்சியம்புராணம்வண்டமிழினிற்புகலென்
றிருநிலம்புகழ்மணிமதிற்கச்சியேகம்பர்
திருவருட்குரியான்றவர்கூறியசிறப்பா
லுரிமையுற்றெழுமாசையாலுரைத்திடலுற்றேன். க

## அவையடக்கம்.

மாயைகாரியவுருக்களுமெம்பிரான்வடிவ
மாயவேல்லைவயருண்மயமாகுமற்றதுபோற்
பேயனேன்பிதற்றுரையுமேகம்பர்தம்பெருமை
தூயகாதையுள்ளுறுதலாற்றுகளறத்தோன்றும். க

இழித்தசொற்புணர்த்தெளியனேனியம்பியகவியுங்
கழித்தவைவகையிலக்கணவழுவுக்குக்காட்டாப்
பழித்திடாதெடுத்தாளுவர்பல்வகைச்சுவையுங்
கொழித்தநாவினராகியவழுத்தபுகுணத்தோர். உ

எழுத்துப்போலியுமெழுத்தெனவாளுவரதுபோற்
புழுத்தநாயினேன்பிதற்றியசெய்யுட்போலியையும்
பழுத்தகேள்வியோர்கைக்கொள்வரென்பதுபற்றி
விழுத்தாணினேன்சிவகதைவிளம்புதற்கிசைந்தேன். ௩

நெறிவழாவுமைபூசனைபோனெறிபிறழ்ந்தோ
னெறிதருங்கலுங்கைக்கொளுங்கச்சியெம்பெருமாற்
கறிவின்மேலவர்காப்பியப்பனுவல்போலறிவின்
குறியிலேன்கவிப்புன்சொலுங்கொள்வதுவழக்கால்.

அவையடக்கமுற்றிற்று.

## நூற்சிறப்புப்பாயிரம்.

எழுசீர்ப்பாவியவிருத்தம்.

அருட்பணிக்குரியமகேச்சுரர்முதலாநல்வருந்தருகவென்றறைய
மருட்புகைதவிர்க்குங்காஞ்சிமான்மியத்தைவழங்குதென்மொழியினுரைத்தான்
கருப்பகையிரிக்குஞானமுமேனைக்கலைக்குஞ்சரிசுறப்பயின்ற
மருப்பொழிலுடுத்தவாவடுதுறையில்வாழ்சிவஞானமாதவனே.

நூற்சிறப்புப்பாயிரமுற்றிற்று.

திருநகரச்சிறப்புத்திருவிருத்தம் - உள.

# திருநாட்டுப்படலம்.

### நாடுவாழ்த்துத்துறை.

கலிவிருத்தம்.

பணங்கொள்பாம்பணிகம்பனார்பணிவளர்பயந்த
வணங்கினேடென்றுமமர்ந்தினிதரசுவீற்றிருக்கு
முணங்கரும்புகழ்க்காஞ்சியையகந்தழீஇயும்பர்
வணங்கமேவரும்பாலிநாட்டணிநலம்வகுப்பாம். ௧

### மழைவாழ்த்துத்துறை.

கடல்கடைந்திடச்செல்லுறாஉம்வெள்ளைமால்கடுப்பப்
படலைவெண்முகில்பரவைநீருழக்கிவாய்மடுத்து
விடமெழுந்தெனமீண்டவம்மாயனைவிழைய
வுடல்கறுத்துவிண்ணெறிப்படர்ந்தொய்யெனமீண்டு. ௨

அற்றைஞான்றுமால்கயிலையைச்சரணடைந்தாங்குப்
பொற்றநந்தியஞ்சாரல்சூழ்பொருப்பினைக்குறுகிக்
கற்றைவார்சடைச்சுந்தரன்கடவுவான்மதுரை
முற்றுநான்முகிலெனவரைமுழுவதும்பொதிந்து. ௩

முரிந்தவெண்டிரைக்கருங்கடன்முகட்டினைக்குழித்து
விரிந்தவெள்ளநீர்மடுப்புழிக்கரந்துடன்மேவிக்
கரிந்திடத்தனைச்செய்ததீவட்டவையின்களவைத்
தெரிந்துவில்லுமிழ்தடித்தெனத்திசைதொறுஞ்சிதறி. ௪

கான்றவக்கனன்மீட்டடையாவகைகருதி
வான்றனிற்குனிசிலையெனத்தடையினைவயக்கி
யேன்றநீயினியெதிர்த்தனையாயிடினின்னை
யூன்றனேடுயிர்குடிப்பலென்றுருமொலியெழுப்பி. ௫

அடுத்தடுத்தலைமோதுதெண்டிரைப்புனலளக்க
ருடுத்தபாரிலுன்கிளையெலாமுதலறவொருங்கே
படுத்துநின்வலிபாற்றுவன்யாமெனப்பகைமை
தொடுத்தவெஞ்சினங்கொண்டழன்மேலமர்தொடங்கி. ௬

விச்சைமந்திரவலியினால்வீங்குநீர்மழையை
வச்சிரக்கணையாக்கிமெய்வளமெனக்கருணும்
பொச்சமின்மறைவேள்வியும்புனிதனேந்தழலு
மெச்சமாகமற்றெவையுமீண்டறக்கெனவியம்பி. ௭

### மழைவளம்.

காட்டகங்களுங்கழைநரல்கதிர்மணிச்சிமயக்
கோட்டகங்களுங்குளிர்புனற்கழனிசூழ்குலவு
நாட்டகங்களும்பரன்முரம்படுத்தெரிகடஞ்செய்
மோட்டகங்களுமுழுவதுங்குளிர்கொளச்சொரிந்து. ௮

இற்றொழிந்தனவொழியமற்றெஞ்சியவெரிபோய்க்
கற்றவேதியர்வேள்வியஞ்சாலையுட்கரப்ப
வுற்றவாகண்டுதன்சினக்கனலையுமொருவி
வெற்றிமாமுரசெனமறைப்பேரொலிவிளக்கி. ௯

தனதுநீர்த்தியுந்திறற்பிரதாபமுந்தரைமே
லனல்செய்கோபமுமுல்லையுமெனவெங்குழுமைத்துப்
புனிதமாமுனைவுதன்னையும்பொதிந்துகொண்டென்னப்
பனிவிசும்பினிற்சிவந்துவெண்ணிறம்படைத்தன்றே. ௧௦

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

உடுவணிகுடுமிக்கோடுபிளவுபட்டிடையப்பெய்யுங்
கொடுமழைக்காற்றுதங்கட்குளிர்பெயன்மாறவெண்ணி
நெடுமலையெடுத்துக்காட்டுங்கெட்டிடிதழ்க்காந்தட்கொள்ளி
விடுசுடர்க்கனலியந்தப்புனலொடும்வீந்ததன்றே. ௧௧

போதமேலாகப்பண்டேபுல்லியமலநோய்தீர்ந்தும்
வாதனைதாக்குமாபோன்மழைப்பெயன்மாறித்தீர்ந்தும்
காதல்செய்துறையும்புள்ளுமாக்களுங்கவன்றுநெஞ்ச
நோதகமரங்களெல்லாநுண்டுளிதுவற்றுமாதோ. ௧௨

கனைபெயலெழிலிக்கூட்டங்கலிவிசும்பகடுபோழ்ந்த
நனைமுடிநந்திக்குன்றூநளிபடப்பொழியுந்தெண்ணீர்
புனைமுறைவசிட்டமேலோன்செருத்தலான்பொழிந்ததீம்பால்
வனைபுகழ்வெள்ளமென்னத்திசைதொறும்வழிந்தமன்னோ. ௧௩

பாலியாற்றுவளம்.

கண்ணகன்குடுமிக்குன்றிற்கல்லெனக்கறங்கியார்த்து
விண்ணிவரேணியென்னவியன்முடிதொடுத்துவீழுந்
தண்ணறுவருவியெல்லாந்தலைத்தலைவிரிந்துதோன்றும்
புண்ணியப்பாலியாற்றிற்சேர்ந்துடன்போயமாதோ. ௧௪

பாரிடங்குழித்துவீழும்பல்வயினருவியெல்லா
மோரிருமபாலியாற்றினொருங்குசென்றணையுந்தோற்றஞ்
சீரியபுவனந்தோறுஞ்சித்திரியவினைகளெல்லா
மோரிடத்தொருவன்றன்பாலுடங்குசென்றுறுதல்போலும். ௧௫

விலகிவீழருவித்தாரைவேறுவேறாகவோடிக
குலநதிப்பாலிவைப்பினேகமாய்க்கூடுந்தோற்ற
முலகில்பல்வழியுமூதாரணிமையினொன்றுமாறும்
பலபலமதமுமீற்றினொருவழிப்படலும்போலும். ௧௬

மலைநகைத்தனையகாட்சிவயின்வயினருவித்தாரை
சிலையினின்றிழிந்துமண்மேற்றிரண்டுசென்றணையுந்தோற்ற
முல்லைவயோடிகலிச்சேடனுயர்வரைக்குடுமியெல்லாம்
பலதலைவிரித்துப்பொத்திக்கிடந்தவப்பான்மைபோலும். ௧௭

குரைபுனற்றொண்டைநாட்டைக்குறும்பெறிந்தடிப்படுத்துப்
புரைதபநடாத்துகென்னுப்புதுமுகிலரசனுந்தி
வரைமிசையிருந்துவேந்தாமணிமுடிசூட்டியுய்ப்பத்
திரைபடுபாலிவல்லேசிலையினின்றிழிந்துபோந்து. ௧௮

அரசுகள்சூழ்ந்துசெல்லவருங்கணிமலர்வாய்விள்ளச்
சரிகுழற்குறமின்னார்கள்பற்பலதானைவெள்ளம்
விரவிடப்பரியகாலாண்மேதகுமாக்களத்தி
யிரதபடைதழுவிப்போதவிகல்கொடுவையமூர்ந்து. ௧௯

அணிவகுத்தெழுந்துகுன்றரரும்பெறற்குறிச்சிபுக்கு
மணிவகையாரம்பூண்டுமதுக்குடவிருந்துமாந்தித்
தணிவறவெளிக்கொண்டேகித்தலைத்தலைவேட்டம்போகித்
துணிபடமாக்களெல்லாந்தொலைத்துடனீர்த்துச்சென்று. ௨0

கலிவிருத்தம்.

மண்டமர்மேல்கொடுவந்தனமின்னே
தண்டகநாட்டுறைதாபதர்நோயோர்
பெண்டிருநம்மரணேகுதிர்பெட்டென்
றெண்டிசையார்ப்பவிசைப்பறைசாற்றி

இருற்றிகிரிப்படைதாங்கியிபக்கோ
டுறுத்திறல்வெஞ்சிலைகாந்தளரும்பு
நறுப்பயில்கோலெனவேந்திநல்வீர
மறுப்பகைமாய்த்துறவெட்சிமலைந்து. ௨௨

முல்லையின்வேந்துமுடித்தகரந்தை
யொல்லையலைத்துயராணிரைபற்றி
மெல்லிதழ்தின்றுசிவந்தெழுவேய்த்தோ
ணல்லவர்கற்பையழித்துநடந்து. ௨௩

வஞ்சிமலைந்துழலைபாலையைவாட்டி
யஞ்சியிடாதுதன்னுனையிருத்தி
யெஞ்சலுறுமருதத்திறையோடும்
வெஞ்சமரேற்றுழிஞைநத்துணர்வேய்ந்து. ௨௪

தடுத்தெதிர்நின்றதடங்கரையெல்லாம்
படுத்துமதன்பயிலபாசறைவீட்டி
மடுக்குளமேரியின்வாட்டமனைத்துங்
கெடுத்தனமென்றுதழீஇக்கிளர்வுற்று. ௨௫

வீறியடாவகைவெஞ்சிறைகோலித்
தூறிடுமேள்ளர்தொலைந்தழிவெய்தச்
சீறியடர்ந்துதெழித்துமுள்வேலி
கீறிவளைந்துகிடங்கினைநீங்கி ௨௬

நொச்சினையுற்றியங்கொச்சியினுள்ளார்
பச்சிளநொச்சிபறித்தணியாமே
நச்சியதும்பைநறுந்துணர்சூடி
யச்செழுமாமதின்முற்றுமகழ்ந்து. ௨௭

கொச்சகக்கலிப்பா.

இடித்துவெளிசெய்துநகரெங்கணுநுழைந்தாங்
கடுத்தமடவார்வயிறலைத்தனரிரங்கக்
கொடுத்திடுவளங்கள்பலகொள்ளைகொடுமண்ணி
னெடுத்துவருவெள்வரகுகொள்ளுடனிறைத்து.

வெற்றிபுனைமாலிகைமிலேச்சியிருபாலுஞ்
சுற்றிவருபுட்குலநிரைத்தொழுதிதன்னுற்
கொற்றமிகுமறவர்களியையகோக்கியறைகூவி
யெற்றுகழிநெய்தல்வழியெய்துறுதலோடும். ௨௮

பௌவமதுணர்ந்துபுவனந்தாளமாகி
வௌவுதிரையேந்திபெதிர்கொண்டடிவணங்கச்
செவ்விதினுவந்துபயுமீந்துதினமாறிக்
கௌவியமெய்யன்பொடுகலந்துளதையன்றே. ௧௦

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

தன்னடிப்படுத்துமேலைத்தண்டகாடுமுற்று
முன்னுறக்கவர்ந்துகொண்டவளத்தினுழுவிரட்டி
பின்னுறவளித்துவானிற்புலவரும்பெட்குமாற்று
லங்கிலையுயிர்களோம்பியரசுசெய்துறையும்பாலி. ௧௧

காரணப்பொருளின்றன்மைகாரியத்துளதாமென்னா
வாரணப்பனுவல்கூறுமரும்பொருடெளியத்தேற்றும்
பேரிசைப்புவிமேல்யார்க்கும்பெட்டனபெட்டவாறே
சீரிதிற்கொடுக்குந்தேனுத்தாவருஞ்செழுநீர்ப்பாலி. ௧௨

வறுமையுற்றழியுந்தொண்டைவளமலிநாட்டோர்தங்க
ளிறுமுடல்வருத்தியேனுமீவதற்கொல்காரற்றே
தெறுகதிர்கனற்றும்வேனிற்பருவத்துஞ்சீர்மைகுன்று
தறுமணலகடுகீண்டுமொண்புனலுதவும்பாலி. ௧௩

சொற்றவித்தீர்த்தமேன்மைசுவைபடும்பாலொடொக்கு
மற்றையதீர்த்தமெல்லாம்வார்தருபுனலோடொக்கும்
பெற்றிமையுணர்ந்துதொல்லோர்பெயரிடப்பட்டசீர்த்தி
பற்றியதெனலாம்பாலிப்பெருமையார்பகருநீரார். ௧௪

காட்டுவளம்.

கலிநிலைத்துறை.

விளம்புமித்தகைமணிகொழிவிரிதிரைத்தரங்க
வளம்புனற்றடம்பாலியான்வண்மைபெற்றோங்கி
யுளம்பயின்றுநாற்பொருள்களுமுஞற்றுநர்க்கிடமாய்த்
துளும்புமேன்மையிற்பொலிந்ததுதொண்டைநன்னாடு. ௧௫

செக்கர்வார்சடைச்சிவபிரான்றிருவருள்செய்யத்
தக்கவாய்மையினுயிர்க்கெலாந்தன்னிடத்திருந்து
மைக்கணெம்பெருமாட்டியெண்ணான்கறம்வளர்க்குந்
தொக்கமாப்புகழ்படைத்ததுதொண்டைநன்னாடு. ௧௬

பவம்விளைத்திடாப்பெரும்பதியெனத்திசைபோய
சிவம்விளைத்திடுநகரங்களேழனுஞ்சிறந்து
தவம்விளைத்திடுகாஞ்சியைத்தன்னிடத்திருத்தி
நவம்விளைத்திடும்பெருமைபூண்டதுதொண்டைநாடு. ௧௭

தரைவிளங்கியதண்டகாட்டினிற்றகைசால்
வரையுங்கானமும்புறம்புணைப்பழனமுமணிநீர்த்
திரையும்வேலையுமென்னுகானிலத்தினுட்சிறந்த
புரையிலைந்திணைவளஞ்சிறிதறிந்தவாபுகல்வாம். ௧௮

குறிஞ்சி.

முருகவேட்கிடுதூமமோம்புறமுளியகில்சந்
தருவனாசமுற்பெய்துபுன்பயிர்விளைத்துவப்பார்
பெருவளந்துறந்தார்தொறுமிடிபேணும்
பொருவில்வாழ்க்கையர்தஞ்செயல்போன்மெனப்பொருப்பர். ௧௯

ஏறுதன்னுடல்வருத்தியபகைமையெண்ணாது
தூறுபன்மணிமாமுதல்பொறையெலாந்தொலைத்த
வேறுநன்றியேகடைப்பிடித்திதைவியன்பொருப்பர்க்
கூறுநல்வளம்விளைத்திடுமுயர்ந்தவர்செயல்போல். ௬0

வேட்டைமேற்புகுவார்க்குநல்வினையுந்தமடவார்
கூட்டமுழ்வாய்க்குழச்சாரலிற்றினைக்குரற்கொய்துஞ்
சேட்டிளங்கிளிக்குலங்களைத்தெரிவைமாரோப்பும்
பாட்டிசைத்திறமொழியிருந்தனுதினம்பயிலும்.

நங்குலத்தருவாழ்க்கையைக்கெடுத்துநம்மிருக்கை
தங்களுக்கெனக்கொண்டவிவ்வேனல்கட்டம்மை
யிங்கண்வாட்டுதுமென்பதோர்சூழ்ச்சியெண்ணியபோ
லங்கணெஞ்சியவேங்கைகள்போதுசெய்தலரும். ௬௨

என்னையூர்ந்தருள்சுடர்வடியிலையவேற்பெருமான்
றன்னைநன்மருகெனப்படைத்தவன்றனதூர்தி
யன்னதாமெனுங்கேண்மையானளிமுகிற்குலத்தைக்
கன்னிமாமயில்காண்டொறுங்களிசிறந்தகவும். ௬௩

நெருங்குபைந்தழைவருக்கைமேனெடுவெளியலைப்ப
வருங்கண்மாமயில்வீற்றிருந்தசைதருங்காட்சி
கருங்கணிரச்செம்மறன்மருகனைக்காண
மருங்குவந்துதன்னூர்தியைநிறுவுதன்மானும். ௬௪

சந்துமாமுந்தாங்கிவம்பலர்ந்ததண்குவட்டான்
மைந்தர்கண்ணையுமனத்தையுங்கவர்ந்திடும்வனப்பின்
முந்துமோங்கலுங்கொடிச்சியர்குழைக்களுமுகிரேய்
கந்தமார்குழைமுகத்தலரிலவங்கங்காட்டும்.

கொங்கையேந்தியவாணகளுமவணகொம்புடைய
துங்கவேங்கையின்குலமெலாமவணபரல்சுரந்து
பொங்குநீடுசேவினங்களுமவணவான்புனலை
யங்கண்வேட்டனுமொரற்றைத்தாளொகினமுமவண. ௬௬

ஆனைலாமொருகன்னியையுழணப்பவாளனையுங்
கோளைவேங்கைகள்யாட்டினோடுறவுகொண்டோங்கும்
பேணுசேவினஞ்சிங்கமேலேறிடும்பிழையா
தேணிணுற்பொலியெகினங்களிடபத்தைவிழுங்கும். ௬௭

வில்லலர்ந்தபல்லுடுக்களும்விண்ணெறிப்படருஞ்
செல்லும்வெண்கதிர்க்கடவுளும்பானுவுந்திறல்சான்
மல்லல்வானவக்குழுவுமெய்ப்பாறவந்திருக்கு
மில்லமெங்கணும்வான்றொடவிழைத்திடுங்குன்றம். ௬௮

போதுமூன்றினும்போதுசெய்காவிசூழ்பொருப்பு
மேதகுந்தமிழ்த்தெல்லையாம்வேங்கடவரையுங்
காதல்பூப்பவத்தாணிகொண்டறுமுகக்கடவுள்
கோதுநீத்தரசாட்சிசெய்குறிஞ்சியக்குறிஞ்சி. ௬௯

அன்பெலாமொருபிழம்பெனத்திரண்டகண்ணப்ப
னெம்பிராற்கொருவிழியிடந்தப்புகாளத்திப்
பொன்பிறங்கியமுகலிசூழ்கயிலையம்பொருப்புந்
தன்புலத்திடையுடையது தடவரைக்குறிஞ்சி. ருo

நாவன்மன்னவர்க்கிரந்துசோறளித்திடெம்மான்
றேவியோடமர்திருக்கச்சூர்திருவிடைச்சுரமும்
பாவகாரியரெய்தொணக்கழுகுசூழ்பறம்பு
மேவரத்திகழ்குறிஞ்சியின்பெருமையார்விரிப்பார். ருக

பாலை.

குராவளித்திடுபாவையைக்கோங்குபொன்கொடுத்துப்
பராரைப்பாடலம்பூந்தழப்பாங்கரின்மணப்ப
மராமரத்துளர்வண்டுபண்பாடவன்முருங்கை
விராவிவெண்பொரியிறைத்திடும்வியப்பினதொருபால். ருஉ

எயிற்றிமாரெழினலத்தினுக்கிரியல்போயுடைந்தாங்
கயற்பொதும்பர்புக்கலர்குராப்பாவைகண்டவர்தந்
துயிற்றுசேயெனக்கவன்றுபோய்த்தாதுணம்புறாக்கள்
வெயிற்றலைக்கணின்றுயருகுவநிலைமைவிண்டவர்போல
தாதுணம்புறவினமெலாந்துணையுடன்கெழுமிப்
பேர்தலூடியுமுணர்த்தியுந்தலைத்தலைப்புணர்ந்து
காதலந்நலார்மொழியையுநகடந்துசேணிடைச்செ
லேதிலாடவர்தமைச்செலவழுங்குவித்திடுமால் ருச

வெங்கதிர்ப்பிரானென்பகற்போதினில்வேனின்
மங்கைகொங்கைநோய்க்குளித்திடுமெபாலையாமைந்த
னங்கணினிலவரசர்பாலிரந்துவந்துறாம்பு
தங்குசூழலிற்சிற்றராசான்வருமுளதால். ருரு

முல்லை.

நவிலுமிந்நிலப்புறம்பயில்புறவநன்மடந்தை
குவிவருந்தழல்வெம்மைகூர்கொடும்பசிதணியச்
செவிலியாய்முகிறீம்பயமூட்டிடவளர்ந்தாங்
கவிழுநீள்வரகாதியாமுதப்பயந்தளிக்கும். ருசா

கொல்லையெங்கணுந்தொழுமலர்த்தைபுனமுருக்கின்
முல்லைமென்கொடிபடர்ந்தலர்நிரைநிரைமுகிழ்ப்ப
வல்லைவென்றகந்தரப்பிரானரகக்கறிமார்பிற்
றொல்லைவெண்டலைமாலிகைதுயல்வரன்மானும். ருஎ

நீலம்பூத்தலர்பூவையைக்கோட்டுநீள்கரத்தாற்
கோலம்பூத்தபொற்கொன்றைகடூஉக்கிடந்தசைவ
னாலம்பூத்தருண்மிடற்றிறைனென்றுமோகினியாந்
சீலம்பூத்தமாலிளமுலைதிளைப்பதுதெளிக்கும். ருஅ

பெண்ணலங்கனியிடைக்குலப்பிடிநடைமடவார்
விண்ணலங்கனிமாதரையெழிலினால்வென்று
பண்ணலங்கனிமிடற்றவர்பணைத்தமுக்கரிந்து
மண்ணிலெங்கணுந்தூக்கிவைத்தெனக்குமிழ்மலரும். ருகூ

மௌவலங்குழலார்விழிக்குடைந்துவான்குதிக்கு
நவ்விமீண்டகலாவகைமகளிர்ரானனத்துக்
கொவ்வுறுதவராணையிற்றியுமேழுமதிகண்
டவ்வுழித்தனதிருக்கையிற்சிறைப்படுத்தலைக்கும். சுo

கற்றைவார்குழலாய்ச்சியர்கயல்விழிமுகத்தின்
பெற்றியொப்புறப்பெருங்குருந்துச்சிமேற்றுவி
யொற்றைமானுடைக்கலைமதியதனிழலுறங்கு
மற்றைமானையும்பற்றுவான்கதிர்க்கையால்வருடும். சுக

நலம்பயின்றிளவேனிலின்விழுமாங்குயில்க
ளலம்புகார்வரும்போதுவாயடைப்பதுமுன்னாட்
புலம்புகொண்டவர்காரொடுந்தலைவர்தேர்புகுத
வலம்புனைந்துரைவளமொழிக்கிடைதலானன்றே. சுஉ

தொண்டைமான்கடக்களிற்றினைமுல்லையாற்றொடக்கி
யண்டர்தம்பிரான்வெளிப்படக்காட்சிதந்தருள்சீர்
கொண்டவூர்புதிமுகல்பலதன்னிடைக்குலவக்
கண்டமுல்லையின்பெருமையார்கட்டுரைத்திடுவார். சுஙு

மருதம்.

பொலஞ்சிறைச்சுரும்புளர்கருகுறுஞ்சுனைப்புறவ
நிலந்தனைப்புடையுடுத்ததுகொடிவாளை
யிலஞ்சியின்றுமீப்பாய்ந்துவெணமதிகிழித்தெழுந்
தலங்கொள்வானியாற்றுலவுந்தடம்பணைமருதம். சுச

ஒருவனாகியசிவபிரானுலகுயிரளிப்பக்
கருணைகூர்ந்துதன்னுருவந்தருபேதமுங்காட்டுந்
திருக்கிளப்பவோர்பாலியேவயலவளஞ்செறிப்பப்
பெருகுதண்புனல்பற்பலகாலகளாய்ப்பிரியும். சுரு

பராரைமூலமேற்பணைகிளைவளாவிரனைப்பலவும்
விராவியொன்றிலொன்றனந்தமாய்க்கவடுவிட்டென்னத்
தராதலம்புகும்பாலியிற்பிரிந்துதன்கரைக்க
ணராவுகால்களுமவைதருகாலகளுமனந்தம். சுசு

நான்முகப்பிரான்வேள்வியைத்தபவுருநதியை
மானமறுத்திடைக்குலையுணக்கிடந்தமைமான
மீன்முகப்பெருங்காற்புனற்றடப்புவிழ்ந்துழகும்
பான்முலைக்கருமேதியாற்பருமடையுடையும். சுஎ

பழங்கண்வேனிலைப்புயல்கொடுபாற்றுதன்னிறைக்குத்
தழங்குமோதையின்மீருதம்வீழ்த்தெடுப்பதுதனைய
வழங்குதண்ணுமையோதையுமள்ளரார்ப்பொலியு
முழங்குதீம்புனற்சும்மையுமுடுகிவிண்புகுமால். சுஅ

பொறிகளைந்தையும்புறஞ்செலாதடக்கியோர்நெறிக்கே
குறிகொளும்படிசெலுத்துபேராளர்தங்கோள்போற்
பிறிவுறும்பலமடைகளிற்பிழைத்திடாதொதுக்கிச்
செறிதரும்புனன்முழுவதுமகன்பணைசெறிப்பார். சுகூ

பழியினீங்கினன்கீட்டியபசும்பொருள்சிறிதுங்
கழிபடாதுநல்வழிப்பயன்படுவதுகடுப்பக்,
கொழிதிரைச்சுவைப்பாலியின்குளிர்புனன்முழுதும்
வழிவுறாதுகால்வழிச்சென்றுவளவயனிறைக்கும். எ0

தண்ணகன்புவிமுழுதுமாங்கடுங்கொலையவுண
னண்ணன்மார்பகம்பிளப்பவர்போலவிர்மணியின்
வண்ணவன்கடாநிரைநிரையாத்துவன்படையாற்
பண்ணைதோறுநின்றுழுநர்கம்பலைகளேயங்கும். எக

மருவுசாறொறும்வெருவிமுன்குதித்தெழுவாளை
யிருமருப்பிடையுறைந்துழுமெருமையைத்தடுக்கும்,
பருவராற்குலமொய்யெனப்பாய்ந்தெழுந்தலைக்கு
முருவவாற்புறத்திறைந்துவல்விரைந்தெழவுந்தும். எஉ

பூண்டவன்கொடுந்தானவனுக்கைபோழ்ந்திடலுங்
காண்டகும்புவிதன்னிறங்காட்டியதென்னக்
கீண்டசாறொறுங்கேழ்கிளர்தமனியங்கிடந்து
மாண்டபேரொளிவயங்கிநீள்கனையிருண்மேயும். எங

வேறுசெய்துபின்பொருத்துறும்வினைவலவமைச்சிற்
கூறுசெய்ததண்சேறெலாங்குழப்பியொன்றாக்கிச்
சாறுசெய்துவர்சவற்றொழுதுறழிடர்தவிர்த்து
நாறுசெய்கெனவென்முளையித்துவர்நாளால எச

அருள்விளங்கலுமுடல்பொருளாதியபந்தம்
தருழவன்புடையெய்துறக்கொடுத்திடுந்தகைபோற்,
பெருகுயாத்தநீர்க்கலங்கல்போய்த்தெளிந்தபின்முழுது
மருவுகால்வழிவடிந்துறக்கவிழ்ப்பர்கண்மள்ளர். எரு

கலிவிருத்தம்.

இளமகப்பசிதனக்கேந்துகொங்கைப்பா
லளவறிந்தூட்டுதாய்மானவாறறி
களமர்கணமுளைபடுனல்செவ்விகண்டுநீள்
வளவயல்பாய்த்தித்தம்மகவினோம்புவார். எசு

ஓரிடத்துயிர்த்ததன்பறழையோம்புவான்
பாரிடைப்பல்வயினுய்க்கும்பூனைபோற்,
காருடற்களமர்கைந்நாறுவாரிப்போய்ச்
சீருடைப்பணைதொறுநடுதல்செய்வரால். எஎ

மரகதந்தளிர்த்தெனவளர்பைங்கூழ்செறி-
தரநிறைகழனியுட்சங்கமூர்வன,
பரவைநீர்மேய்ந்தெழும்படலைக்கொண்டலுட்
சரமதிநுழைந்துசெல்காட்சிசாலுமால். எஅ

களமர்கள்களைகளைபருவங்கட்டலு
ழிளமயில்வயல்வளங்காணவெய்தியாங்
குளமகிழ்கூர்தரவுழத்திமாரெலாம்
வளமலிபணைதொறும்வந்துமுற்றுவார்.

அம்புயமுற்பலமாம்பலாதியாம்
பைம்புதற்களையறப்பறித்ததம்முருக்,
கொன்புனற்றோன்றலுங்கொய்தபுன்களை
பின்பினுமுளைப்பதென்பெயர்த்தென்பார்சிலர். ௮௰

பங்கயமாம்பலுற்பலத்திற்றேனுண்டு
தங்கியவண்டினந்தமதுவாண்முகஞ்
செங்கனிவாய்விழிசேர்ந்துமூசுற
வங்கவைகட்டெறிந்தகற்றுவார்சிலர். ௮௧

பாயிதழ்த்தாமரைபறித்தகொப்புமை
யாயுநரொண்முகஞ்சேர்த்தியைத்தேன்
வாய்மடுத்திணையிலதென்றுமாற்றல்போன்,
மீயுயர்கரைப்புறம்வீசுவார்சிலர். ௮௨

இணைவிழிக்கிணையிலையென்பதன்மையி
னணுகிநீகாணெனவுரைத்துக்காட்டல்போற்,
பிணையுநாசியினெதிர்பிடித்துமோந்துதேன்
றணிவிலுற்பலமுடிசார்த்துவார்சிலர். ௮௩

சைவலங்களைகுவாரொள்குனியத்தாழ்குழ
லெய்தியெம்மினைத்திணையொரேன்மினென்பபோற்,
கைமிசைவிழுந்துசிக்குண்ணக்காணிமிர்த்
தையபூங்குழன்முடித்தணைகின்றார்சிலர். ௮௪

நறுமலர்ப்பங்கயங்களையுநாரியர்
கறுவொடுமுள்ளரைக்காம்புபற்றலுந்
தெறுகரங்கிழியப்புண்செய்யுமேதமக்
கிறுதிசெய்வார்க்கெவரிடரிழைத்திடார். ௮௫

அலமருவிழியினமாமெனமுக
மலர்மிசைப்பாய்தருகயலுமாண்டதன்
குலமெனப்புறவடிகூடுங்கூர்மழு
மிலவிதழ்கடைசியரெளிதிற்கைக்கொள்வார். ௮௬

பறிதரக்களைந்தெறிபாவைமாரையம்
மறிபுனற்குவளைகால்வளைத்துப்பாம்பெனப்
பொறிவெருவுறச்செயும்புடைப்பின்மொய்ம்பிலாச்
சிறியருந்தம்மினுந்தீங்கிழைப்பரே. ௮௭

களிபடுசுரும்புளர்கமலக்கஞ்சமு
நளிபடுகுவளையுநனைகொளாம்பலுந்,
தளிரியற்கடைசியர்முழுதுஞ்சாடுவா
ரளிமருவலர்க்கெவரன்புசெய்குவார். ௮௮

புரைதபுபசும்பயிர்ப்பொலிவுங்கண்டெலா
நிரைநிரைகிடந்தபுன்னிறத்தபூக்களும்,
வரைதவழ்முகில்களும்வானவிற்களுந்
தரையிடைப்பயன்பெறச்சார்ந்ததாக்குமால். ௮௯

இருண்முகிலுறழ்பயிரிடையெலாந்தடித்
துருகெழவயங்கியாங்குலவுழந்நலார்
திருமலர்ப்பதமெல்லப்பெயர்த்துத்தேங்குழற்
கருஞ்சிமிழ்ந்தெழக்கரையிலேறுவார். ௬௰

தெறுங்களைகட்டநீர்ச்செறுவிற்பண்டுபோ
னுறுங்களம்போருகச்சேக்கைநாடிவந்
துறுங்களியோதிமமுயங்கிவாடுவ
வறுங்களநாடியுண்மறுகுமாந்தர்போல். ௬௰௧

கொள்ளைபோய்நனிவறங்கூர்ந்தகாலையும்
வள்ளியோர்விருந்தினர்வாடக்காண்பரோ,
கள்ளருமலர்வளமிழந்துங்கார்வயல்
வெள்ளனமகிழமீன்விருந்துநல்குமால். ௬௰௨

மண்ணகமகளிர்கைவண்மைகண்டியாம்
விண்ணகமகளிர்கைமேன்மைகாண்டுமென்
றெண்ணிமேற்சேறலுற்றென்னவான்பயிர்
கண்ணிறைகவின்செழித்தோங்குங்காட்சித்தே. ௬௰௩

கொச்சகக்கலிப்பா.

ஈன்றெடுத்தோர்குணமுதவுகிளையுமுறைப்படிவிதந்
றோன்றுமுளைமுனைவிளைத்துப்பின்பசந்தொடர்பின்
லான்றசெழுங்கதிர்களுமுன்றாவெள்ளையாயெழுந்து
மான்றமிரகதமேனிவாய்த்துமடலவிழ்த்தெழுமால். ௬௰௪

ஆரமகளிரங்கைவளமறிபாகுமேற்போந்து
திரையெறிநீர்க்கடல்வரைப்பிற்றெரிவையர்கைகிண்ணையொவ்வா
மரபுணர்ந்துமீண்டென்னவானேகிக்கதிர்தெழுந்த
பரவுபுனற்றடஞ்சாலிபார்நோக்கியிறைஞ்சுமால் ௬௰௫

பேதைமையிலாடவர்முன்வளைவின்றிப்பெதும்பைமையின்
மேதகச்சூற்றெனவணங்கிமங்கைமையின்மிகநாணு
மாதரைப்போற்பைங்கூழின்மன்னவனெதிர்கதிர்தெழுந்த
வேதமிலாக்கதிர்முதிர்ந்துவரவரக்கீழிறைஞ்சுமால். ௬௰௬

உருத்திட்டமுருகாலைத்தலைநிற்இயுற்றதற்பின்
றருக்கற்றுநனிவணங்கிப்பழுத்தகதிர்த்தடஞ்சாலி
பெருக்கத்துவேண்டும்(ற்பெரும்)பணிவு(மிகச்)சிறிய
சுருக்கத்துவேண்டுமுயர்வெனுமொழியின்சுவைதேற்றும். ௬௰௭

தூமதிவாக்கியகிரணந்துளித்தென்னக்கதிர்ச்சாலி
காமர்மணித்தாளங்கள்கான்றுசெறுத்திடராக்கிப்
பூமலரக்கால்யாத்தபுனன்முழுதும்புறங்கவிழ்த்து
மாமைநீர்புலர்த்தவருமள்ளருளமகிழ்விக்கும். ௬௰௮

வணங்குகுலைக்கதிர்ச்சாலிசிலையாகவளர்புதழ
யுணங்குகதிர்கணையாகவொளிர்முளரிக்கரம்பற்றி
யிணங்குபசுங்குரல்கவரவரும்புட்களிரிந்தோட
லுணங்குபுரிந்தெதிர்கண்டோரதிசயிப்பச்செயும்பணைகள். ௬௰௯

குறையவித்தினைகொண்டுகுடியெலா
நிறையச்சாலிநிரப்புவயும்பணை,
யிறையளித்தவிருநாழிநெற்கொண்டே
யறமெலாநிறைவிக்குமமலைபோல். ககo

கொடுப்பகொண்டுபெருக்கிக்கொடுத்தலா
லடுத்தவாணிகர்போலுமகன்பணை;
யுடுத்தசோலைகளும்பர்கடவுணீ
மடுப்பதென்னவளர்ந்தெழுந்தோங்குமால். ககக

கலிநிலைத்துறை.

கொண்டலுக்குமாலிநிகர்ப்பக்குளிர்பாளை
விண்டுமுகைக்கும்பைங்கமுகெங்கும்விளையாட்டு
வண்டலர்கொங்கைக்கிண்டியிளநீர்மழுவர்காண
தண்டமிசைக்கொண்டெய்தியளிக்கும்வளர்தெங்கு. ககஉ

செற்றெயில்வென்றூர்தேர்மிசைமேற்போக்கெனமென்பூந்
துற்றபொதும்பர்த்துறையினினத்தாற்செருவேற்றுப்
பற்றியவாவிநீங்குபுபைந்தேனடைகீறி
யுற்றெழுவாளைபொருதுயிர்விண்டோர்கதிகாட்டும். ககங

போதுகண்மேயநெடுங்கயமேவுபுனிற்றுக்கார்
மேதியையாயிடைவாளைவெருண்டுவிசும்பேறி
பாதிவெரிந்புறமுட்குழியக்குதிபாய்ந்தாடி
மீதுயர்திண்கரையேறவுகைக்கும்வியப்பிற்றால். ககச

சுவையொளியூறோசைநாற்றமெனாங்கின்றொடர்பற்றிக்
கவர்படுநெஞ்சிற்றிரைதிரைதோறுங்கடைநீர்நாய்
துவளவெழும்பாமுறைமுறைகீழ்நீர்ச்சுழல்காட்சி
யெவருழிறும்பூதுறவுளவேரித்தடமெங்கும். ககரு

கரைத்துறுதண்பூங்காஞ்சிகள்சாகைக்கரமோச்சி
விரைததகரும்பைத்தைவருதோற்றம்விரிதார்வண்
டிரைத்தெழுதிண்டேராட்கேள்வரொடுமிளையார்மே
னிரைத்தமர்செய்வான்வேள்சிலைபற்றுநிகழ்விற்றால். ககசா

மேதகுசெவ்வணிதாங்கினர்செல்லுமினன்னூருந்
தீதறவெள்ளணிபூண்டுசெல்சேடியராளோரும்,
போதலுமீடலுமாய்ப்பொலிவீதிகளெங்கெங்குங்
காதல்செய்சேரிமடந்தையருள்ளங்கவல்விக்கும். ககஎ

தசும்புறழ்கொங்கையொடெம்பெருமான்மகிழ்தண்பாசூர்
விசும்பையுரிஞ்சுமதிற்றிருவல்லம்விரைச்செந்தே
னசும்புதடம்பொழிலேனையவைப்புமனந்தஞ்சூழ்
பசும்பணைமாமருதத்தெழில்யார்பகர்கிற்பாரே. ககஅ

நெய்தல்.

கொச்சகக்கலிப்பா.

அம்மருதவைப்பிணையடுத்தகழிநெய்தன்
மம்மர்விடவாலமுணுக்குதவுமாற்று
ணம்மினமெனப்பொய்ம்மொழிகாடியுரைஉத்தை
சும்மையிளைக்கரோகுழுந்துறவுகொள்ளும். கககூ

கண்டன்மடலேறவலர் தூற்றுகமழ்புன்னை
யுண்டுநறைகாலுமளியொத்துடனிசைக்கும்
வண்டுளருநம்புவிரிநெய்தன்மணமிசையுங்
குண்டுகழிமேய்பறவைநோக்கிமகிழ்கூரும். கஉ0

கண்டுமொழியாரவயவத்தெழில்கவர்ந்து
தெண்டிரையளக்கரினொளித்ததுதெளிந்து
கொண்டதுறையோர்கடல்குளிப்பர்துகிர்சங்கம்
வண்டரளம்வாரிமடவாரெதிர்குவிப்பார். கஉக

எம்முடையுறுப்பெழிலைவவ்வினிர்களென்னுக்
கொம்மைமுலைவம்பணிபரத்தியர்வெகுண்டு
விம்முவளைசேல்பவளம்வெண்டரளமற்று
மும்மபிறர்கொள்ளவிலையாற்றிமகிழ்கூர்வார். கஉஉ

கண்ணெழில்கவர்ந்தகடன்மீன்களையுணக்கு
முண்ணமிழ்தமன்னமடவார்பறவையோப்பும்
பண்ணிசைமடுப்பவிழைபய்வழுமருக்கன்
விண்ணெழுபகற்பொழுதின்மெல்லெனவொலிக்கும். கஉங

துணந்தவர்களாருயிர்வருத்தவிறல்சாற்றி
மணந்தழுவுதும்பைமலர்சூடியடன்மார
னணங்கமர்செய்காலமெனவோர்ந்துமுரசாழி
யிணங்குறவிராப்பொழுதின்மிக்கொலியெழுப்பும். கஉச

வீழ்ந்தவர்தணத்தலின்விழிப்புனலுகுத்துத்
தாழ்ந்தழுதிரங்குமடமாதர்தமைநோக்கி
யாழ்ந்தகழியாதுமுடனின்றழுவதென்னச்
சூழ்ந்துபுளரற்றமலர்தேத்துளிதுளிக்கும். கஉரு

நலம்பயில்பொருட்குழலிவங்கமிசைநண்ணும்
புலம்பர்வருகின்றவழிநோக்கினர்புலம்பி
யிலம்படுமடந்தையர்களின்னுயிர்தளிர்ப்ப
வலம்புகுளிர்பூந்திவலைவீசுமலைவாரி. கஉசா

புன்புறாதத்தரும்வியந்துபுகழ்செய்ய
வென்பையொருபெண்ணெனவியற்றுநகரொற்றி
நன்பதிமுதற்பலவுடுத்தருளிநெய்த
றன்பெருமையாவரளவிட்டறிதரத்தோர். கஉஎ

திணைமயக்கம்.

அறுசீரடியாசிரியவிருத்தம்.

திருத்தொண்டைநன்னாட்டுநானிலத்தைந்திணைவளமுந்தெரிந்துகாட்ட
மருத்தொண்டைவாய்ச்சியர்சூழ்குன்றைநகர்க்குலக்கவியேவல்லானல்லா
கருத்தொண்டரெம்போல்வாரெவ்வாறுதெரிந்துரைப்பார்கலந்தார்க்கின்ப
முருத்தொண்டீரணியிலவையொன்றொடொன்றியைந்தனவுமாங்காங்குண்டால்.

வரைப்பிண்டிமலர்தூவிவனப்பலர்செதிர்சொரிந்தமலருண்மூழ்கி
நிரைக்கும்பூங்கணைதூவிமதனெழுமான்விழிநெருப்புணிற்றல்காட்டும்
வரைத்துன்றுகுறிக்கொடிபோய்க்கடுக்கைமிசைமரகதத்தோரணம்போற்றுவ
னிரைக்கின்னவார்சணமுழமெதிர்கடப்பப்பொருநர்செலெங்கயிறுகாட்டும்.

விண்முட்டுங்குடுமிவரைத்திகிரிபடிமேல்வனைமுத்தும்வேலைச்சூழன்
மண்முட்டநறும்புன்னையுகுழரும்புக்கலைமயங்கியவற்றுட்சேர்ந்த
தண்முட்டையிதுவென்னப்பகுத்தறியவல்லாதுதளர்வுகொண்டு
கண்முட்டவளம்புடைத்தவயலன்னுந்துயர்கூருங்காட்சித்தோர்பால்.

குறுஞ்சுனையிற்களிவண்டுசுழன்றாடுங்கான்குயில்கள்குரைநீர்ப்புன்னை
தொறும்பொதுளுங்கருங்கொடிதன்குடம்பையிற்போய்க்கருவுயிர்த்துச்சலவிமீண்டு
நறும்பிரசமலர்க்காஞ்சிச்சினையேறியொளியிருந்துநாடிக்கால
முறுந்துணையுமினிதுறையுமுலவாதவளங்காட்டியோங்குமோர்பால்.

கறிக்கொடியுந்துகிற்கொடியுநெடுவயலைப்பசுங்கொடியுங்கமழ்தேன்மௌவல்
வெறிக்கொடியுநாற்றிசையுந்தாய்ப்படரநிவளர்ந்தவிளைக்குராமேற்
கிறிக்கொடியபெருங்காற்றாற்பலுகாலுமசைபாலைக்கிளர்ச்சிவாளக்கண்
மறிக்கொடியுங்கூத்தியர்செய்கியிறுவிசிகழைக்கூத்தின்வயங்குமோர்பால்.

இனையநானிலமுடுத்தவளாகமெலாம்பெருங்குடிகளியல்பினோங்கித்
தினையளவுமுறைபிறழாத்தொண்டைநாட்டணிமுழுதுந்தெரித்துக்கூறக்
கனைதிரைநீர்க்கடலாடைநிலவரைப்பின்யாருளரோகற்பநாட்டுந்
தனைநிகர்பாதலதலத்துமன்னதேயெனிற்பிறிதுசாற்றுமாறென்.

ஏங்காட்டுப்பெருவளமுமெய்வெவர்கோட்பாடுகளுமியம்பவல்ல
பொன்னாட்டுப்பொன்செருகும்பன்னுக்குப்பணிச்செருக்கும்போக்குமிக்க
நன்னாட்டைப்புலவரெலாந்தொண்டைநாடெனவுரைப்பர்ஞாலமங்கை
தன்னாட்போதனையமுகக்கனிவாயாங்காரணத்தின்சார்பாற்போலும்.

சலதியுடைச்சேயிழைக்குத்தமிழ்நாடேமதிமுகமாத்தமிழ்நாட்டுள்ளு
மலர்புகழ்த்தண்டகநாடேகனிவாயாவதனையுஞ்சாதிபேதங்
குலவுமாருயிர்களெல்லாந்தத்தமதுமரபொழுக்கங்குனைகசேரா
மலகமெனத்தேற்றுநல்லினுமெவையாங்காஞ்சிநகர்வண்மைசொல்வாம்.

திருநாட்டுப்படலம்முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - ௧௪௨

# திருநகரப்படலம்.

அறுசீரடியாசிரியவிருத்தம்.

கச்சிமாநகரோர்தட்டுங்கடவுளருலகோர்தட்டும்
வைச்சுமுன்னயனார்தூக்கமற்றதுமீதுசெல்ல
நிச்சயமுறுகித்தாழ்ந்துநிலமிசைவிழுமிவ்வூரை
யிச்சகத்தார்களோடுமெண்ணுதன்மடமைப்பாற்றே.

கவினெலாந்திரட்டிக்காஞ்சிக்கடிநகராக்கிக்கஞ்சத்
தவிசினோன்றன்பானுட்பத்தொழில்செயச்சார்ந்தகாலைப்
புவியிடைக்கழிந்தசேடம்பொற்பவேறெடுத்துவிண்ணா
டுவிர்தரச்செய்தான்போலுமன்றிவேறுரைப்பதென்னே. ௨

ஆதிநாண்முக்கணெம்மானயன்றனைப்படைத்துவேத
மோதுவித்தருளினோக்கியுலகெலாம்படையென்றேவும்
போதினயார்த்திவ்வாறுபடையெனப்புகன்றவைத்தா
னிதெனவுங்காஞ்சியென்றுரையவைத்தாமே.

இந்நகர்நோக்குந்தோறுமிமையவர்தமதுநாடு
நன்னரென்றிருந்ததம்மைத்தாங்களேநாணிலைவர்
முன்னொருசமயந்தன்னைப்பொருளெனப்பற்றிநின்றோர்
பின்னர்வான்சைவமெய்தப்பெறினவர்பேசுமாபோல். ௪

நீடுழிநகரமன்னிநெடுந்தவமுயல்வோர்வான
நாடர்தம்பதமுங்கஞ்சனாரணன்வலாரிவைப்பும்
பாடிரிகான்றசோறாக்காண்புதிப்பதியின்வன்மை
கோடியிலொருகூறெவ்வாவவையெனக்குறித்தேயன்றே. ௫

புறநகர் - சோலை.

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

சுரும்புகாலுழக்கமுகையுடைந்தலர்ந்துதுளிதததீஞ்சுவைமதுப்பிலிற்று
மரும்பெறற்சோலைமீமிசைக்கருவிமுகிற்குழாமுட்டுவபாட்டளிக்குலை
விரும்புதேனளியாக்கற்பகநாட்டைவெல்லுவான்வருவதோர்ந்தஞ்சித்
தரும்புகழ்வலாரியூர்தியைச்செலுத்தித்தடுத்திடைமடக்குதன்மாலும்.

நறவமூற்றெடுப்பச்சிறகர்வண்டிமிருநளிபொழிலிடும்பைகூர்ந்தழுகு
குறைப்படப்பொதிந்தகுயினங்களைவல்லைக்குத்தெழூஉத்துதைத்துதைத்தகற்றி
நிறைபுனற்றடத்துப்பிறழ்தருங்கிழமைமெட்டிளவாளைமீன்றனகுத்
துறைதொறுங்கைம்மாறெனக்கனிசெழுந்தேன்சொரிவனநெடுமரப்பொதும்பர். ௭

வண்டலாட்டயரும்வாண்மருணெடுங்கண்மங்கையர்நெறிசுரிகூந்தற்
கொண்டலைக்காணுந்தொறுந்தொறுமவர்தங்கோமளச்சாயலுகக்குடைந்து
தொண்டுபூண்டிதின்முடிவதேய்ப்பதத்தோகைமாமயிலடங்குயிற்றுர,
தண்டளிர்துவன்றிப்புதுநறுந்துளிகுந்ததைமலர்ச்சாகையம்பொதும்பர்.

வாம்பெருந்திரையதடம்புடையுடுத்தவளமபொழிற்சாகைகடோறும்,
தீம்புனல்குடையுமாதரார்முன்னூட்டிச்செறித்தபட்டாடைபொன்னணிகள்
பூம்புனலகத்திற்றோன்றலுமிளையோர்புனலரமகளிரென்றஞ்சிக்
கூம்பியகரத்தரந்நலார்நகைப்பக்குலைமிசைநோக்கிவெள்குவரால்.

கொங்கவிழ்பொதும்பாக்கொழுமுகையுடைந்துகுளிர்மதுசொரிதலினுழ்ந்த
பூங்கயச்சேக்கைமீமிசைமயங்கிளம்பைப்பயமேனிவந்தெழுவ
பொங்குவெம்பாவக்கருமுருட்டிமண்றுபுணரியுட்சிலைபுடனமிழ்ந்து
மெங்கள்வாகீசரஞ்செழுத்தருளாலெழுந்துமேல்வயங்குதன்மாலும். ௧௦

யானைக்கூடம்.

கலிவிருத்தம்.

முறைமுறைபனைக்கைநீர்முகந்துவாய்மடுஉ
நிறைதடங்குறைதடமாக்குநீண்டவெண்
பிறைமருப்பொருத்தன்மாமதப்பெருக்கினாற்
குறைதடநிறைதடமாக்குங்கொள்கைத்தே. ௧௧

தாமுறையிடந்தரியலர்கட்கிந்தவர்
தாமுறையிடங்களிற்றங்கிளைக்குலந்,
தாமுறப்பரிவருத்தனைசெய்வேழங்க
டாமுறைமுறைதிரிதண்டமெண்ணில.

மழைப்புனறங்கண்மேலூற்றுமாமுகி
லுழைச்செலவெகுண்டெதிரிறைப்பதொப்பநீள்
புழைக்கையினிறையநீர்முகந்துபோர்மதத்
தழைச்செவிக்கரிகள்விண்டலத்துவீசுவ. கங

கறையடிச்சுவடெனுங்கனகவட்டில்க
ணிறையவாக்கியமதநீரைச்செல்வர்போற்
சிறையளிக்குலமெலாந்தெவிட்டவுண்டுவாழ்ந்
தறைபெருவளத்தனவாம்பல்வீதியே. கச

கொடையினிற்கீழ்ப்படுங்கொண்டல்யாவையுந்
தடைபடச்சிறையிலிட்டாங்குச்சார்கடு
நடையிருமுறச்செவிநான்றவாய்க்களி
றடையவும்பிணித்தனவளவில்கூடமே. கரு

துதிரைப்பந்தி.

கரியுமிழ்விலாழியுங்காய்சினக்கடும்
பரியுமிழ்விலாழியும்பாய்ந்துசேறுசெய்
தெருவெலாமநலார்சீறடிச்சுவ
டுருகெழுதாமரைதோற்றமொக்குமே. கசு

சுலவுகொய்யுளையடிச்சுவடுதோறுமேற்
கலனையினுக்கசெம்மணிகதிர்ப்புள, 
பலசுடர்த்தகழிகள்பரப்பிவைத்தெனக்
குலவுநல்வளத்தனகுந்தவீதியே. கஎ

மல்லலரைமயிலகளைவானரங்களைப்
புல்லியமுயலகளைப்பொருசரங்களை
வல்லவாபுறகொடைகண்டவான்கதிப்
பல்லியற்புரவியின்பந்தியாயிரம். கஅ

மதக்கரிதனைமுயலவயங்கொள்காதையைப்
புதுககவிங்கிருவொளிப்பொலிவைப்புற்றியிர்த்
ததிர்ப்பதென்றுளங்கொளக்கரியவாங்குரா-
கறுதத்தொகைபற்றுபொற்றேர்கணக்கில. ககூ

எரிமணிச்சோதியுண்மூழ்கியிர்ததுச்செல்
பரிகளைக்காண்கிலர்பார்த்துச்சூரனூர்
திருவுடையிந்திரஞாலத்தேர்கொலென்
றுருகெழச்செல்லுதேருலப்பில்வீதியே. உ0

வீரரிருக்கை.

நால்வகைநிலையினுற்பயிலுநாமவில்
வேல்வளைபலகைவாள்கற்கும்விஞ்சையர்
கோலவான்விஞ்சையர்குழாங்களைக்குபு
சால்பினைவியத்தகுதலைமைப்பாலரே. உக

கிம்புரிபுரசைகள்கிடுகுகூவிர
மம்பொனிற்கலனைகுப்பாயமாதிய
வெம்படையேனவும்வேறுவேறுசெய்
பம்பியவினைஞர்வாழிடம்பல்லாயிரம்.

நடைநகமுதலியவுலவுநாமநீர்ப்
புடைநகர்வளமிதுபுகன்றுந்திங்களே
ருடைநகமனைமுகிகரோதியார்பயி
லிடைநகர்வளமினியியம்பலுற்றதே. ௨௩

இடைநகர்.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

குடமுலைக்கெதிரென்றோதுங்குரும்பையைவெகுண்டுமின்னார்
பொடியிடியுலக்கைமீப்போய்ப்புடைத்தனமீளமுன்ன
முடிமிசையதிரத்தாக்கிச்சிந்துமுப்புடைக்காய்த்தெங்கி
னிடரிடர்க்கெதிர்செய்வோரின்வியத்தகவெங்குமோங்கும். ௨௪

கோல்வளைகறங்கக்கொங்கையசைதரக்குலையக்கூந்தன்
மேலணிகலகலென்னவியர்வெழவுயிர்ப்புநீள
வால்வரிப்புனம்பந்தாடுமாதரார்செயல்காண்டோறுங்
கால்வரிகழலினோர்க்குக்காமமீக்கூருமாதோ. ௨௫

தமதுருநிறத்தைவவ்வுந்தருக்கறிந்தொறுப்பார்போலத்
தமனியந்தகர்த்தசுண்ணமொருவர்மேலொருவர்வீசத்
தமனியச்சுண்ணமெங்கும்பரந்தனதவழ்தலாலே
தமனியவுலகந்தன்னையொப்பனதடந்தேர்வீதி. ௨௬

எரிமணிசோதிகால்விருள்வரவறியாமாடத்
தரிவையர்கூந்தலூட்டுமகிற்புகைநாகத்தெய்திப்
பெரிதிருள்விளைப்பநோக்கும்பெற்றியோர்கட்டுமாறு
மரீஇயினவுலகமென்னேயெனமனமருள்வரம்மா. ௨௭

அகழி.

மாற்றவள்பூசையாற்றிவரம்பெறுமுறைமைகேளா
வேற்றமார்கங்கையாளுங்கம்பர்பால்வரத்திற்றெய்திச்
சாற்றருங்கச்சிமூதூர்வலங்கொளுந்தகைமைத்தாய
வாற்றல்சாலகழியாழமகலமாரளக்கவல்லார். ௨௮

நெடுபடுபொதும்பர்சூழநிரைநிரைக்கரத்தாற்செம்பொற்
றடமதில்பொதியப்புல்லுந்தண்கிடங்கிறைவரேவக்
கடல்களேவளையநோக்கிக்கம்பரையிறுகப்புல்லுஞ்
சுடர்மணிக்கங்கைமானுந்துளித்தநீர்தழும்புமானும். ௨௯

திரையெறிதரளம்பாங்கர்த்திரண்டுவாலொளிகள்வீசிக்
குரைபுனல்குளிக்கும்வேழக்குழாத்தைவெண்கயமாச்செய்யக்
கரைமிசைக்காண்போரென்னேயிம்மையேகடவுட்டன்மை
புரைதபத்தருமித்தீர்த்தமெனவிறும்பூதுகொள்வார். ௩0

கடம்படுகளிநல்யானைகுண்டகழ்கலக்கிக்கொட்பத்
தடங்கரையேறற்கார்த்துத்தாட்டொடர்பிணித்துப்பாக
ரிடம்படவிருபாலீர்ப்பவிருங்கடலமுதமுண்ணத்
தொடங்குநாட்சிலம்புகட்டுச்சுராசுரர்கடைதன்மானும். ௩௧

நவமணிகொழித்துப்பொங்குநளிதிரையகழிகாப்பக்
கவளமாக்கடத்தயானைக்கணஞ்சுலாயுழக்குங்காட்சி
யுவர்படாப்பௌவமீதென்றுவந்துவந்தெழிலிதெண்ணீர்
சுவறவாய்மடுப்பக்கொட்குந்தோற்றமேயனையதம்மா. ௩௨

உடல்படைத்தியக்கவோர்நிமித்தனுண்டெனக்கொளத்
திடம்வலித்தசான்றதாயுவனர்தாட்செயப்படுந்
தொடர்புடைப்பொறிக்குலஞ்சுழன்றெழும்விழும்புகை
யிடல்கெடத்தெழிக்குமோடுமீளுமின்னநீரவே. ௪௩

இம்மதிற்பொறிக்குலமெதிர்த்துளோர்தமைச்செகுத்
திம்மெனுமுன்வென்றிகொள்ளுமீதுணர்ந்துதெவ்விர்கா
ளம்மவீண்டுறேன்மினென்றுகையெடுத்தசைப்பபோ
லும்மதிற்றலைத்துகிற்கொடிநுடங்குமாலரோ. ௪௪

கலிவிருத்தம்.

வளமகன்றிருநகர்க்கிழத்திமாமைசா
லிளமுலைதிளைப்பக்கரமெழினிசேர்த்துபு
தளர்வறநாட்டியதம்பமேயெனக்
கிளர்மதிலிடந்தொறுஞ்செறியுங்கேதனம். ௪௫

நேமிமால்வரைமிசைக்கிளைத்துநீண்டவே
யாமெனக்கொடிமிடையமபொன்பாமதின்
மீமிசைக்கோபுரமேலுஞ்சேறலால
யாமினிப்புகல்வதற்குவமையில்லையே. ௪௬

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

மகதநாடென்னக்காஞ்சிவைப்பினுங்கடைநெரய்தி
யிகலறவளர்க்குமெண்ணென்கரத்தினுக்கிடர்செய்யாமைத்
தகையுணங்குமையாள்வைத்ததடைநிகர்மதிற்சீர்முற்றும்
புகரறவியம்பப்புக்காற்புலவர்க்குமுலப்புறுதே. ௪௭

மிடைபுறத்தூர்களெல்லாம்விண்ணவர்நகராவங்கட்
புடைநகரயனூராகப்பூமகள்கொழுநன்றன்னூ
ரிடைநகராகமற்றையீசனூருலகமேயா
நடைபிறழாதகீர்த்திபடைத்தவுண்ணகரஞ்சொல்வாம். ௪௮

அகநகர் - பரத்தையர் வீதி.

அளிமதனூலினூற்றுலாடவர்தம்மோடாடிக்
களிமனைக்குள்ளாற்றுங்கள்விளைத்திடுங்கலவியெல்லாந்
தெளிதரமாடந்தோறுஞ்சித்திரந்தன்னிற்காட்டி
யிளையரைமயக்கிக்காமமேற்றுவோர்சேரிமல்கும். ௪௯

வரியளிமுரலாவாடாமாலையுமிடையாநோக்க,
தரைமிசைத்தோயாத்தாளுஞ்சித்திரந்தயங்குகாட்சி
வரைவிலாமகளிரின்னோர்மாணலம்வேட்டுவானிற்
சுரர்களுமெய்திச்செவ்விபார்த்துறைதோற்றமொக்கும். ௫௰

பூத்தபினிராறுநாளுங்கிழத்தியர்ப்புணர்ந்துதம்மை
நீத்தனரெனுஞ்சீற்றத்தானின்றவீரொன்பானுள
மேத்துமாடவரைத்தங்களிளமுலைத்துருக்கமேற்றிப்
பாத்திருங்கியமெல்லாம்பறித்தனர்கொள்ளைகொள்வார். ௫௧

கோலத்தினிசையின்யாணர்க்கூத்தினினவிநயத்திற்
சீலத்திற்கலவிச்செய்கைத்திறத்தினிற்பிறவாற்றானு
ஞாலத்துமைந்தர்தம்மைமருட்டிநற்பொருள்கள்வவ்விக்
காலுற்றசாற்றுவேழக்கோதுபோற்கழியநீப்பார்.

அலகினல்லறஞ்சூழ்காஞ்சியமர்பெருஞ்செல்வராயுங்
குலமுறைச்சார்பால்வெங்கோய்க்கோட்பட்டாரிழிஞரேனுஞ்
சிலகொடுப்பனவுங்கொண்டுசேர்ந்துபொய்வஞ்சமெல்லா
நிலைபெறவுடைத்துவைத்தநெஞ்சினராகிவாழ்வார். ௫௩

முலைவிழிக்கணிகைநல்லாராடவர்தமக்குநல்கு
மிலைநிகரெனுமின்பத்திற்கின்பமுஞ்சமமாக்கொண்டு
விலையெனநிதியுங்கோடல்வியப்பிற்றேயேற்றமாக
மலைநிகர்தனங்களீந்தோர்மலைநிகர்தனமுங்கொள்வார். ௫௪

தவமறைக்கிழவன்மாயன்றானுமென்றிவருமிவ்வூர்க்
கவர்மனப்பரத்தைமாதர்கண்வலைப்பட்டேயின்று
மிவறியவல்லரோமாலோம்பித்தவொன்றிப்பேர்பெற்றார்
சிவசிவயாவரேயோரிவர்திறத்தகப்படாதார். ௫௫

விற்றிடுமல்குறன்னைமீளவுந்தாமேயாக்கி
மற்றையநாளும்விற்கும்வரைவிலார்வீதியிச்சீர்
கற்றிலாவணிகமாக்களாவரைந்தவினைநோக்கிப்
பற்றுவெண்டரளக்கோவைபத்தியாற்சிரிக்குமன்றே. ௫௬

இருடைவாணிபத்திற்கூட்டுதமமியருமிறும்பூதெய்த
வருவமாமின்பம்பன்னையிம்மியினளவுமேரு
துருவமாம்பொருளுக்கேற்பநிறுத்துவிற்றொழுகவல்ல
விருமனப்பெண்மார்தம்முட்டருநகிவாழிருக்கையீதால். ௫௭

ஆவணவீதி.

இன்னவீங்குளவோவென்னக்கடாதலுமியம்பியோர்சட்
கன்னவிங்குளவில்லென்றிறுத்தலுமறியாதியாரு
மென்னவுந்தருதிரென்னவிலைகொடுத்தேற்பவீய
மன்னியெப்பொருளுமென்றுநிறைமாவணமனந்தம். ௫௮

செய்வினையனைத்துந்தன்பாற்சேர்த்துவைத்துயிர்க்குப்பின்னா
ரவ்விறையாணையாற்றூலளித்திடுமாயையேபோற்
கொய்வளம்வருவமுற்றுங்கொண்டுபின்னுயர்கண்மாறப்
பௌவநீருலகுக்கெல்லாமுதவுவபைம்பொன்மாடம். ௫௯

அணங்கனார்பரப்பிவிற்குமணிகளைக்கோங்கந்தாரிற்
சுணங்கினைக்கணியென்றஞ்சிச்சுரும்பினமுருமைநோக்கிப்
பணங்கிளர்பாந்தளல்குற்பாவைமீரன்னேபொற்பு
மணங்கமழ்கின்றதென்பாராடவர்மருட்சியெய்தி. ௬௦

வீழ்பொருளெடுக்கலாற்றாவுறுசனமிடைந்தவீதித்
தாழ்குழன்மடவார்மைந்தர்தங்களுண்முட்டுங்காலைக்
காழ்மணிமுலையுந்தோளுங்கலந்துறவுவகைபொங்கி
வாழ்நருஞ்சிலரேபல்லோர்வாடினைந்தழுங்குவார்கள். ௬௧

கலிநிலைத்துறை.

நெருங்குபல்சனமுழக்கருக்கூலநீல்விடத்தைக்
கரந்தகம்பர்மேற்றெழித்துறுங்கடல்பெருந்தெருவாய்
சுரந்துவந்துகாற்புறத்திலுஞ்சனமிகத்தொகுவ
பரந்தவீரையுட்புகுந்திடும்பற்பலநதியே. ௬௨

மற்றையவீதி.

அறத்தினீணகர்புவனேசக்கரமெனவுரன்ற
திறத்தபொன்மதிலேழுடைச்சின்மயக்கோயிற்
புறத்துவான்மிசைப்புலவர்கண்ணூறுபட்டிடாமை
மறைத்தெனக்குயினுரிஞ்சுபூம்பந்தர்சான்மறுகு. ௬௩

மகரப்பொற்குழைப்பிரான்றளிசூழ்மதில்குறடு,
நகரச்சீரெயில்சுற்றுமாளிகைநிரையாருந்,
திகழச்சூழ்தெருவாரிடைவெளியுமாய்ச்சிவன்றேர்ச்
சகடத்தேருடைச்சகடமற்றென்றெனத்தயங்கும். ௬௪

சரிக்குங்குஞ்சரமதப்பெருங்கலுழியுந்தளவைச்
சிரிக்குமூரலார்களந்ததார்நறவமுஞ்சேறாய்
விரிக்கும்வீதியிலடிவழுக்காவகைவெயிலைப்
புரிக்குஞ்செம்மணிபதித்துமேனடப்பராம்புரியோர். ௬௫

ளுள்ளற்பாய்கரினறியநீர்வண்டலாட்டயரு
முள்ளற்சேறுகள்புலர்த்துவானிடையிடையகழ்ந்து
பள்ளத்தாற்சிறுகால்பலவகுத்தெனப்பிறங்கும்,
வள்ளற்காவலர்செலுத்துதேர்ச்சகடுபோம்வழியே. ௬௬

செய்யதிண்புயத்தெழிலினைக்கவர்ந்தமைதெரிந்து
வெய்யமாந்தர்கள்வெதும்புறப்பன்முறைதாக்க,
வையவோவெனவலறுவபோலணிமுழவ
மையவேலையுஞ்சமழ்ப்புறவயின்றொறுங்கறங்கும். ௬௭

விலாழிநீருமொண்சந்தனவிரைச்செழுஞ்சேறுங்,
குலாயவீதிகால்வழுக்குமென்றஞ்சுபுகோண
னிலாமுடித்தவர்திருவிழாத்தொழவந்துநெருங்கும்
வலாரியாதியோரடிபடியுருவகைநடப்பார். ௬௮

புரசைத்திண்களிறுலாத்தரும்பொலஞ்சுடர்மறுகிற்
பரசப்போதருமன்னவர்பணிமுடிநெருக்கி,
னரசப்பன்மணிதெறித்துவீழ்ந்திமைப்பனவீயா
முரசப்பேரொலியதிர்ப்பினிலுக்கமூதுடுப்போல். ௬௯

அங்கண்வீதியினணிநலங்காணுமாதரத்தி
னெங்கணுதனுந்திருவிழாவென்பதோர்பெயரான்
மங்கையாளொடுமகாரொடும்வானவர்பழிச்சத்
திங்கடோறெழுந்தருளுமேலுதன்வளஞ்சிறிதோ. ௭௰

மாளிகை.

பாலியேமுதல்பலநதித்திவலைபாய்ந்தழகின்-
பாலவாயமாளிகையடித்தலத்தினைப்பாராப்
பாலவெண்சுதைமாடமேற்சிகரமும்பனிவிண்-
பாலியாற்றுநீர்த்திவலைகள்போர்ப்புவான்படரும். ௭௧

பன்னிறப்பரிகருங்கரிதொழிலமைபஃறே
ரின்னகீழ்நிலைவாயிலினியங்குதனோக்கி,
மன்னுமேனிலைவாயில்வெண்கரிபசுமான்றே
ரன்னவேனவுந்தன்னிடத்தியங்கவானணவும். ௭௨

அலங்குகீழ்நிலைமாடமுங்கடுப்பினின்மாட்டு
மிலங்குகிற்புகையான்விரையேற்றுவர்மடவார்,
புலங்கொண்மேனிலைமாடமும்புரிகுழற்கூட்டுந்
துலங்ககிற்புகையான்மணங்கனுழ்ந்தொகுப்பார். எ௩

இருசுடர்ப்பெருஞ்சிலைகளினியன்றமாளிகைக
ளுருகுவெங்கதிர்தடவரச்சுடுகனலுமிழு
முருகுதண்கதிர்தடவரக்குளிர்புனலுமிழு
மருவினோர்குணம்பிடிபட்டல்வையகத்தியல்பே. எ௪

நெறித்தகூந்தலார்மேனிலைச்சாளரக்கதவு
திறத்தலுந்தடைபடுமகிற்புகையெலாந்திரண்டு
புறத்தினேகுவவழுதிதன்சிறைப்படும்புயல்கண்
மறித்துவிட்டநாள்விரைந்துவிண்சேறலைமானும். எ௫

தெரித்தபன்மணிமாடமேற்றிகழ்ந்தபொற்குடத்து
விரித்தவெங்கதிர்க்கடவுணிம்றசைதல்வேட்கோவர்
திரித்துவிட்டசக்கரமெனலாகுழத்திகிரி
புரித்தபச்சைமண்ணெனலாமதற்பயில்களங்கம். எ௬

சிரவுந்திலத்தோரணச்செழுங்கதிர்நிரைகள்
விரவிவிண்ணெலாம்வெள்ளொளிவிரித்தலானன்றே
பரவுமேலுழும்பேரும்விழிப்பருவந்துமல்லா
லிரவிமண்டிலச்சேயொளிவிளங்கிடாவியல்பே. எ௭

திங்கள்செங்கதிராளமென்றுரைப்பதேதேற்ற
மங்கணித்திலந்தோரணத்தொளியினிலரிபோற்
றங்கிவெண்கதிராயினதற்குறுஞ்சான்று,
துங்கமாலையுங்காலையுஞ்சிவந்துதோன்றுவதே. எ௮

அணங்கனார்நகைததிடுந்தொறுமாங்கவர்வளர்த்த
கணங்கொண்முல்லைகண்மூகைப்பனிவர்நகைக்கவினை
யிணங்குநாங்கவர்ந்தொளித்தமையறிந்தனரென்றே
வணங்குநாணினலுடன்சிரித்திடுவதுமானும். எ௯

ஆடகத்தியன்மேனிலைமிசையணங்கனையார்
மாடகத்தனியாழிசைக்குவந்துறும்வான
நாடகத்துவெண்களிற்றினைநளினமென்மலர்ப்பூம்
பாடகத்தடிநடையினற்பிருவரீலுறுப்பார். ௮௰

பளிக்குமேனிலத்தங்கலார்பணைமுலைநெருங்கக்
களிக்குமாடவர்தமைத்தழீஇக்காமப்போர்க்கலவி
விளைக்குமாற்றலைக்குரவினிலவிழைந்தவனெருசா
ரொளித்திருந்துகாண்போனெனச்சுருங்கையுனுழையும். ௮௧

மேனிலத்தரமியத்திடைத்துயிலுமெல்லியலா
ரானனத்தெழில்கவர்ந்துழிசன்மதியினையவர்தங்
கானலர்க்குழற்காரளியின்றொடர்க்குறைப்ப
வீனமுற்றவத்தழும்புவான்கறையெனவிலங்கும். ௮௨

உங்கண்மாதரார்முகத்தெழினோக்கியோர்வடிவங்
கங்கணுள்குளான்படைத்ததிலவயவங்காண்பா
னங்கண்முன்னுறவகுப்புழியஞ்சனக்குலையப்
பங்கமுற்றதென்றெழீத்ததைமதியெனப்பகர்வார். ௮௩

இவ்வரைப்பினிலிரவியுமதியுமம்வழியே
செவ்வனேகுறுதொறுங்குவவிவர்முகச்சீர்க்கும்
பவ்வனேரகலல்குற்கும்வடிவெடுப்பினைத்தே
ரொவ்வுறுமைகண்டிட்கொளுமுட்கினலன்றே. ௮௪

தங்கள்வாண்முகமதியெனச்சார்தரும்பணிக்குத்
துங்கமாடமேன்மின்னனார்வேற்றுமைதோற்றத்
திங்கண்மாட்டுறிகுறியொன்றுசெய்துவைத்தனரா
லங்கண்மாநிலங்களங்கமென்றிடப்படுமதுவே. ௮௫

மறைந்திடாமறுப்பயின்மதிமுகத்தெழில்பெருது
குறைந்துபார்க்குமங்கரிவைமார்கோணுதல்கடுப்ப
நிறைந்துபார்க்குமீண்டவர்முகநிகர்ப்பமற்றிவ்வா
றறைந்ததிங்கடோறலமருமக்கரைப்பசுப்போல். ௮௬

கதிர்செய்மாடமேற்புலவிதீர்கலவியின்முடிவின்
வெதிர்செய்தோளியர்கொண்கர்தம்மருமமேல்வதனம்
பதியவைத்தனர்துயிலுவரற்றம்பார்த்திருந்து
புதுமுகத்தெழிலுடுபதிவெளவுறுப்பொருட்டே. ௮௭

தேங்குமூடலின்மாதரார்பறித்தெறிசெங்கே
ழோங்குபன்மணியவரடிவருந்தினைந்துளோர்
வாங்குநாடொறுமபைதுறுத்தவிர்வனகொடுதாத்
தாங்கள்செய்வினைதங்களுக்கேபகையாமே. ௮௮

விருந்துநாடொறுமிடையறுதெதிருமேதகவா
லருந்திறற்சிறுபுதல்வர்சூழ்ந்தணுகிடுந்திறந்தான்
முருந்துமூரலார்க்காயிடைகம்பூரணர்பான்மூண்ட
மருந்திலூடலுஞ்சிறுவரையன்றிமேவாதால். ௮௯

மேனிலத்துவந்துலாயிடுங்கடவுண்மெல்லியலார்
தாழ்நிலத்துறுங்கூவல்களேனோக்கிநந்தமைப்போற்
கீழ்நிலத்தவர்தாமுமிங்கெய்தினர்கெழீஇப்போ
மூழ்நிலைத்தபல்பிலங்கொலாமுளையெனவியப்பார். ௯௦

கலிவிருத்தம்.

காலமன்றிக்கனிவுறமாதரைக்
கேலவான்புகையேற்றுதல்போன்மினார்
சாலவெம்முலைச்சாந்தம்புலர்த்திடு
நீலதூமம்பிர்ந்தெழுமெங்கணும். ௯௧

கொன்னும்வார்குழற்கூட்டுங்குருஉப்புகை
யந்நலாரைப்பொதிவதவர்தமைத்
தன்னினீங்கியமின்னெனத்தண்முகி
லுன்னிவந்துவளைந்திடலொக்குமே. ௯௨

வார்கொள்கொங்கைமலர்க்கணையேறிடு
மோர்கொடாய்யிற்கருப்புவிலேந்துவார்
தார்மலர்க்குழலாரியர்தாங்கடாம்
வீரவேள்பணியென்றறிவிப்பபோல். ௯௩

நாறுதோட்டுளினமிரண்டினின்
மாறிமாறிவீழ்வண்டினமாமெனக்
கூறுமாதர்குழ்இயிருந்தாடுஇ-
ரேறுமம்மனைப்பாட்டிசையெங்கணும். ௯௪

தங்கள்பண்மொழிக்கொக்குந்தகைமையை
யங்கணுப்பவரேய்ப்புவணிமலர்ச்
செங்கைமெலவிரலசேர்த்திந்திவவியா
ழெங்குமங்கையர்பாடுவரெண்ணிலார். ௯௫

வேறு.

கொங்கையினொதிருநகசுசிறுமெலவாப்
பொங்கொளித்தாளம்பினைனெலிப்பப்பூவைமார்
மங்கலச்சதிநெறிவழாமலாடரங்
கெங்கணுநூபுரத்திசையினீட்டமே. ௯௬

மைந்தர்பந்தெறிதலுமாடப்பித்திகை
சிந்துவபன்மணிசெழியன்செண்டெடுத்
துந்தியன்மேருச்சிமேலப்பிலபுயிதி
தந்திடும்வடதிசைச்சாரற்குன்றுபோல். ௯௭

மணிப்பொலமபூட்சிறார்விடுக்கும்வான்படந்
தணிநதொறுமவிடுந்தாறுந்தணிந்துநீளவவை
கணிப்பருநந்திநெட்டுயிரபயின்காற்றிடைப்
பணிப்பகைமுனையுமுலபரிசுகாட்டுமே. ௯௮

மாடமேற்சிறுமகார்விடுகரும்வண்படம்
பாடலசாலிருகூடர்தம்மைப்பற்றுவா
ரூடினதிரிதருநாகமென்னவு
மாடுவவிசும்பிடையமரர்நோககவே. ௯௯

அட்டிலிற்குய்ப்புகையணங்கனார்குழற்
கிட்டிடுமகிற்புகைமகநதெழும்புகை
முட்டியேற்பரந்தெங்குமொய்த்ததோர்இலார்
வட்டவான்செழும்புகைவண்ணமென்பரே. ௧00

வேள்விச்சாலை.

இந்திரனார்துயிலதெய்தித்தன்முடிச்
சுந்தரஞ்சிதைதரத்துதையச்சிறித்தன்
மந்திரப்புகையினல்வலாரியூரெழில்
சிந்திடச்செய்வசீர்வேள்விச்சாலையே. ௧0௧

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

ஆகுதித்தழலினறுதொழிலாளருமறைமனுவெடுத்தோதி
யோகையிற்சொரிநெய்தெறித்தெழும்பிதிர்வுமொலிபடுபுலிங்கமுங்கொ
மேகமாய்ப்படர்ந்தனமமேயிடித்துமின்னிநீர்பொழிவனபோலு
மீகைசால்வேள்விமறுத்துழிமாரியின்மையேயிதற்குறுசான்றால். ௧0௨

அந்தணரிருக்கை.

பூசுரப்பெயரினிருமொழிப்பொருட்குமுரிமைபூண்டுறுநிலைக்கேற்பக்
காசினிவரைப்பினாடொறும்வழாதுகமழ்சுவையடிசிலானதிதி
பூசையும்வேள்வியினிற்கடவுட்பூசையுமொருங்குசெய்கடப்பா
டாசறவாற்றும்பார்ப்பனவாகையறிஞர்வாழிடம்பலவவண. க0௩

அரசிருக்கை.

தகைபெறுவலியாற்றெம்முனைமுருக்கிக்காவற்சாகாடுகைத்தெங்குந்
திகிரியொன்றுருட்டிமுறையுளிசெங்கோல்செலுத்துநர்கள்வர்மற்றுயிர்கள்
பகைவர்தாந்தம்மாலென்றிவ்வயினைந்தும்பயந்தடுத்துலகெலாம்புரக்கு
மிகுபுகழ்படைத்தவரசியல்வாழ்க்கைவீரர்வாழிடம்பலவவண. க0௪

வணிகரிருக்கை.

மேதகுவிரிஞ்சனரும்பெறற்குறங்கைவிழைதகையாமெனப்படைத்தோ
ரேதிலர்பொருளுந்தம்மபோற்பேணிவாணிபமீட்டுநர்வடாது
மாதிரத்தலைவன்புறங்கொடுத்திரியும்வளத்தினர்மறைநெறியொழுக்க
மாதரித்துயர்ந்தவிழுக்குடிவணிகரமர்ந்துவாழிடம்பலவவண. க0௫

வேளாளரிருக்கை.

முருகுயிர்த்தலர்ந்தமலரவன்றனதுமுகமுதலுறுப்பெலாந்தாங்கிச்
சரணமென்றுரைக்குமுறுப்பினிற்றோன்றிச்சாற்றுமம்முகமுதலுறுப்பின்
வருமொருமூவர்தங்களையுழவின்வண்மையானிலைபெறத்தாங்கு
மூரியவேளாண்மைபூண்டபேர்தமகேயுடையவரிடம்பலவவண. க0௬

அனுலோமர்முதலியோரிருக்கை.

நால்வகைவருணத்துயர்குடிப்பிறந்தநலலவரிருக்கையைச்சூழ்வ,
சால்புறுமவரிலுயர்ந்தவரிழிந்தோர்தங்களுட்புழீஇமணந்தளித்த
பால்படுமேனைச்சாதிபேதத்தோர்பலர்களுந்தத்தமநெறியின்
சிலராய்த்துவன்றிமரபுளியொழுகுந்திருமலிபலவகைக்குடியே. க0௭

கழகம்.

வளரிலைத்தருப்பைநுனியெனக்கூர்த்தமதியினர்தொன்றுதொட்டுடைய
பளிக்குறுகேள்விப்பயிற்சியர்மேற்கோண்முதற்பகாமூன்றினுந்தெருட்டி,
யிளையருக்குணர்த்துமிலக்கணநெறியோரிருபுலமையர்தம்முட்
களவிகலிகந்துகுழாங்குழாமாகிக்கலைதெரிகழகமும்பலவால். க0[illegible]

சைவமடம்.

காமனைமுனிந்துநெடுஞ்சடைதரித்துக்கவின்றகல்லாடைமேற்புனைந்தி
யாமெலாம்வழுத்துந்துறவியென்றிருந்துமொருத்திதனிளமுலைச்சுவடு
தோமுறக்கொண்டானெனச்சிறையிடல்போற்சுடர்மனக்குகையுளேகம்பத்
தோர்மொழிப்பொருளையடக்கியானந்தமுறுநர்வாழிடம்பலவுளவால்.

திருக்கோயில்.

இருண்மலந்துமிக்குஞ்சிவாகமமுறையினீரிருபாதமுமுணட்டித்
தருள்பெறுமாதிசைவர்களாதியவாந்தரசைவருளோர்
மருவிவாழ்மாடமாளிகைப்புறத்திமருங்குடுத்துயர்வனப்பினதாற்
றெருட்டருமுனிசைவர்வீற்றிருக்குந்திவ்வியாலயம்புரிசையேயனையம். ககO

### வேள்விச்சாலை.

*அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.*

சேந்தபொற்குண்டத்தோங்குஞ்சிகைத்தழன்மிசையேகம்ப
வேந்தையாவாகித்தேத்தும்புகைபொதிவேள்விச்சாலை
யேய்ந்தசீர்த்தகரவித்தைமுறைப்படியிதயகஞ்சப்
பூந்தழற்சிகைமேலீசற்போற்றுமாயவனையொக்கும். கககூ

### மாமூலத்தோருவர்.

கோழரைக்காம்பாச்சாகைவட்டமேற்குடையாப்பொற்பின்
வாழியவொருமாமீதுவளநிழல்கவிப்பவாங்க
ணூழ்முறையுயிர்கட்கெல்லாமைந்தொழிலோம்பியெம்மா
னூழ்புனலுலகமேத்தவீசுவீற்றிருக்குமன்றே. கஉ0

பற்பலதேயமெல்லாம்பாங்குடைத்தொண்டைநாடு
பற்பலசங்கநாப்பட்படர்வலம்புரியாமங்கட்
பற்பலநகரமெல்லாம்வட்டமாப்பபடைத்தகாஞ்சி
பற்பலவலம்புரிக்குட்சலஞ்சலப்பணிலமாமால். கஉக

அத்திருக்காஞ்சிவைப்பினலகிலாத்தலங்கட்கெல்லாம்
பத்திசேர்மாடக்கம்பம்பாஞ்சசன்னியமாமங்க
வுத்தாரசுரிமுகத்துள்விலைவரம்புணராச்சாதி
முத்தமேயொருபாமூலத்திருந்தருணமுக்கண்மூர்த்தி. கஉஉ

பன்மணிவெயில்கள்கான்றுபடரிருள்சீப்பவட்டப்
பொன்மதில்சூழ்ந்துநாப்பட்சதாசிவப்புத்தேள்வைகுந்
தன்மையாற்கச்சிமூதூர்தரைமிசையுயிர்கள்செய்த
கன்மமோர்ந்தளிப்பான்வந்தகதிர்செய்மண்டிலமேயாமால். கஉங

விலக்கிலாவறநூல்சொன்னமுனிவரும்விதிவிலக்கா
மிலக்கியமிதன்பாற்கண்டேயிலக்கணம்விதித்தார்போலு
மலக்கணீத்தறமெண்ணான்குமம்பையேவளர்க்குநீரா
கலக்கமிலறங்கட்கெல்லாமாகரங்காஞ்சியன்றே. கஉச

உவரிசூழுலகவைப்பினுரையமைகேள்விசான்ற
கவிகளென்றுரைப்போர்தம்முட்காஞ்சியைப்புகழாரில்லை
யவரெலாம்புகழ்ந்துமின்னுமுலப்புறுவதன்சீர்மூற்றுஞ்
சிவநிறைகல்விசாலாச்சிறியனோகிளக்கவல்லேன். கஉரு

இத்திருக்காஞ்சிவைப்பிற்பலதளியிடத்துமோவி
யத்தகுகம்பவாணரவரவர்க்கருளிச்செய்த
வுத்தமக்காதையெல்லாஞ்சூதனன்றுரைத்தவாறே
முத்தமிழறிஞர்தேறமொழிபெயர்த்துரைப்பேனுய்ந்தேன். கஉசு

திருநகரப்படலம்முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - உகஅ.

